இருமைக்கு துணையாய் நின்ற விருபிறப பாளர்க் கேறப
அருமைத்தாரு சிறபபு நல்கி யவரிடத் தவரை யுய்த்துப்
பருமதத யானை வேந்தன் பகற்கதிர வானத் துச்சி
வருமபபோ தெழுநது செமபொன மாடநீள கோயில புக்கான்.

ஏனை மந் திரருக தத்த மிலபுகப புரவி பார்த்த
மாநக ராருந தத்த மனைபுகப பரியினபாகா
ஆனவா தாமுங் கோயி லடைநதுதம விளையாட் டெல்லாம்
மீனெடுங கணணி னுட்கு விளமபின ரிருநதா ரனறே. ௧௨௭

ஆகச் செய்யுள் — ௨,௧௨௬



## அறுபத்தாவது

# பரி நரியாக்கி வையை யழைத்த படலம்

[கலிநிலைத்துறை]

ஞான நாயக னனையா னரிபரி வெள்ளம்
ஆன வாறுரை செய்துமீண் டப்பரி நரியாய்ப்
போன வாறுகண் டமைச்சரைப் புரவலன் கறுப்ப
வான வாறுபோல் வையைநீர் வந்தவா றுரைப்பாம் ௧

நெருங்கு தூரிய முழக்கமுந் தானையு நிமிர
மருங்கி லாதவர் வந்தெதிர் மங்கல மேந்த
அரங்கொல் வேலினா னருளிய வரிசையோ டணைந்து
புரங்கொல் வேதியர்க் கன்பர்தந் திருமனை புகுந்தார் ௨

உடுத்த சுற்றமுங் கழகமு மொட்டிய நட்பும்
அடுத்த கேண்மையால் வினவுவா ரவரவர்க் கிசைய
எடுத்த வாய்மையான் முகமனு மகிழ்ச்சியு மீந்து
விடுத்த வாதவூ ராளிகள் வேறிடத் திருந்து ௩

கரந்தை சூடிய வாலவாய்க் கண்ணுத ஞமன்
திரந்த வண்ணமே யாங்கொடு போகிய வெல்லாம்
பரந்த வன்பருந் தானுங்கொண் டெம்மையும் பணிகொண்
டரந்தை தீர்த்தன னறியு மரசனுக் கிசைய. ௪

நல்ல வாம்பரி செலுத்தின னமக்கினிக் கவலை
இல்ல வாம்படி யாக்கின னின்னமொன் றுலகை
வெல்ல வாம்படி தன்னருள் விளைக்குமா னந்தம்
புல்ல வாம்படி யமைத்தவம் பூட்டுவான் வேண்டும் ௫

என்ற வாதரந் தலைக்கொள விகபரத் தாசை
ஒன்று மின்றியே யுணர்வினுக் குள்ளுணர் வாகத்
துன்று பூரண மாகிய சுந்தரச் சோதி
மன்று ளாடிய சேவடி மனம்புதைத் திருந்தார். ௬

காளை யுந்திரு வாலவாய் நாயகன் றமரை
ஆள மண்சுமந் தருளுமென் றதனையுங் காண்பான்
ஊளைவெம்பரிப்* பூழிபோய்ப் புண்டமெய் கழுவி
மீள வேண்டுவான் போற்கடல் குளித்தன்ன வெய்யோன். ௭

ஈச னுடல்வெம் பரிக்குழாத் தெழுந்தசெந் தூளான
மாசு மூழ்கிய வண்டத்தை வானிலா வென்னுந்
தூசி னலறத் துடைப்பவ னென்னமணித் தொகுதி
வீசு மாழியுண் முளைத்தன்ன வெண்மதிக் கடவுள். ௮

சேய தாரகை வருணமாத் தீட்டிய வானம்
ஆய வேட்டினை யிருளெனு மஞ்சனந் தடவித்
தூய வாணிலா வென்னும்வெண் டுசிறை றுடைப்பான்
பாய வேலையின் முளைத்தன்ன பனிமதிக் கடவுள். ௯

கள்ளொ ழுக்குத்தார் மீனவன் கடிமனை புகுந்த
புள்ளு வப்பரி நள்ளிருட் போதுவந் தெய்தப்
பிள்ளை யாகிய மதிமுடிப் பிரான்விளை யாட்டால்
உள்ள வாறுதம் வடிவெடுத் தொன்றொடொன் றுசாவும் ௰

சங்கி னோசையும் பண்பறை யோசையுஞ் சரிந்த
மங்கு லோதிய ரழுகுர லோசையும் வடந்தாழ்
கொங்கை சேப்புறக் கையெறி யோசையுங் குளிர்†
எங்கு நாஞ்செவி பருகுவ மின்னமு தென்ன ௰௧

வாம்ப ரித்திர ளாகிநா மணித்தரைச் சுமந்து
தாம்பு சங்கிலித் தொடக்குண்டு மத்திகைத் தாக்க
ஏம்ப லுற்றனம் பகலெலா மிப்பொழு தீண்டு
நாம்ப டைத்தன நம்முரு நம்விதி வலத்தால் ௰௨

கான கந்தனி லொழுகுநாண் முதலிந்தக் கவலை
யான துன்பநா மறிந்தில மின்னமு மாத்த
மான வன்றொடா வடுக்களு மத்திகைத் தழும்பும்
போன வன்றினிப் புலருமுன் போவதே கருமம் ௰௩

உள்ள மாரநாந் தினப்பதற் கூன்சரிந் தொழுகும்
நொள்ளை நாகில நந்தில நுழைந்தளை யொதுங்கும்
கள்ள நீள்கவைக் கான்ஞெண்டு மிலவினிக் கடலை
கொள்ளி னேடுமைம் பயறுபுற் கொள்வதை‡ யடாதால். ௰௪

---

(பா-ம்.) * வெம்பரித் தூளி. † குளிற. ‡ கொள்வகை.

நாடிக் காவலன் றமருளார் நகருளார் கண்டாற்
சாடிக் காய்வரே புலருமுன் சங்கிலித் தொடரீத்
தோடிப் போவதே சூழ்ச்சியென் றாக்கமுற் றொருங்கே
கூடிப் பேசின வூளைவாய்க் குறுநரிக் குழாங்கள். ௰௫

வெறுத்த காணமுங் கடலையும் விரும்பின கோளூன்
றுறுத்த நாகுநந் தலைவனைச் சங்கிலித் தொடரை
முறித்த கால்களிற் கட்டிய கயிற்றொடு முளையைப்
பறித்த வூளையிட் டெழுந்தன போம்வழி பார்ப்ப ௰௬

நின்ற நீணிலைப் பந்தி*யு ணெருங்குமா நிரையைச்
சென்று தாவிவா ளெயிறுறச் சிதைபடக் கடித்து
மென்று சோரியைக் குடிப்பன வீக்கிய முளையோ
டொன்ற வோடவே யண்டத்தி லூறுசெய் வனவால். ௰௭

ஊளை யோசைகேட் டிம்மென வுறக்கநீத் தெழுந்து
காளை வீரராம் மந்துரை காப்பவர் நெருநல்
ஆளி போல்வரு பரியெலா நரிகளாய் மற்றை
ஒளி மாநிரை குடாப்பறித் துண்பன கண்டார். ௰௮

காண்ட லுஞ்சில வலியுள கடியமுள் ளரணந்
தாண்டி யோடின சிலநரி சாளர முழையைத்
தூண்டி யோடின சிலநரி சுருங்கையின் வழியால்
ஈண்டி யோடின நூழில்புக் கேகின சிலவே. ௰௯

முடங்கு காலுடைச் சம்புவு மூப்படைந் தாற்றல்
அடங்கு மோரியுங் கண்குரு டாகிய நரியும்
ஒடுங்கி நோயுழந்† தலமரு மிகலனு மோடும்
இடங்கள் கண்டில பந்தியிற் கிடந்தன வேங்கி ௨௰

கிட்டி யோடினா வெருட்டுவோர் கீழ்விழக் கடித்துத்
தட்டி யோடுவ சிலவெதிர் தடுப்பவ ரடிக்கீழ்
ஒட்டி யோடுவ சிலகிடந் தூளையிட் டிரங்குங்
குட்டி யோட்டணைத் தெயிலிற் குதிப்பன சிலவே. ௨௧

மறம்புனைந்தவேன் மீனவன் மாளிகை தள்ளிப்
புறம்ப டைந்தவிந் நரியெலாம் பொய்கையுய் யானம்
அறம்ப யின்றநீண் மனைமறு காலயங் கவலைத்
திறம்ப டாந்தபன் மாடநீ ணகரெலாஞ் செறிந்த. ௨௨

(பா - ம்.) * நீணிலைப்பந்தி. † ஒடுங்கு நோய்.

மன்றுஞ் சித்திர கூடமு மாடமு மணிசெய்
குன்றுந் தெற்றியு முற்றமு நாளொடு கோள்வந்
தென்றுஞ் சுற்றிய பொங்கரு மெங்கணு நிரம்பி
ஒன்றுஞ் சுற்றமோ டோலையிட் டுழல்வன நரிகள். ௨௩

கரியி னோசையும் பல்லிய வோசையுங் கடுந்தேர்ப்
பரியி னோசையு மின்றமி ழோசையும் பாணர்
வரியி னோசையு நிரம்பிய மணிநக ரெங்கும்
நரியி னோசையாய்க் கிடந்தது விழித்தது நகரம். ௨௪

விழித்த ஞாளிகள் விழித்தன கேகயம் வெருவி
விழித்த கோழிகள் விழித்தன மதுகரம் வெருண்டு
விழித்த வோதிமம் விழித்தன குருகினம் விரைய
விழித்த வாரணம் விழித்தன கருங்கொடி வெள்ளம். ௨௫

அட்டில் புக்கன நிணத்தினை யழற்பசி யுருக்கப்
பட்ட டுக்கிய கருங்கல முருட்டுவ பாகு
சுட்ட சோறுபல் லுணவுவாய் மடுப்பன சூழ்ந்த
குட்டி யுண்ணவுங் கொடுப்பன கூவிளி கொள்வ. ௨௬

புறவு பூவைபைங் கிள்ளைகள் பூத்தலைச் சேவல்
பிறவும் வாருவ வுறங்கிய பிள்ளையைக் கொடுபோய்
நறவு நாறிய குமுதவாய் நகையெழ நக்கி
உறவுபோல் விளை யாடுவ வூறுசெய் யாவால். ௨௭

பறிப்ப வேரொடு முன்றில்வாய்ப் படாப்பசுங் கொடியைக்
கறிப்ப நாகிளங் காயெலாங் கரும்புதேன் கவிழ்
முறிப்ப வாயிட்டுக் குதட்டுவ வண்டுவாய் மொய்ப்பத்
தெறிப்ப வூளையிட் டாடுவ திரிவன பலவே ௨௮

ஆயி ரம்பொறி திரிமருப் படலெழு மேடம்
ஆயி ரங்கருந் தாதுநே ராகைய வேனம்
ஆயி ரங்களி றனையசூட் டவிர்தலைக் கோழி
ஆயி ரங்குறும் பாரப்பொடு மாருயிர் செகுப்ப ௨௯

பின்றொ டர்ந்துநாய் குரைப்பொடு துரந்திடப் பெயர்ந்து
முன்றொ டர்ந்துயிர் செகுப்பன வெஞ்சின மூட்டி
வன்ற டம்புய மள்ளர்போய் வலிசெயப் பொறுத்து
கன்றி வந்துசெம் புனலுகக் கடிப்பன வனந்தம். ௩௰

பன்றி வாயவிடு மிரககமும பலபொறி முளவாய
வெனறி வாரணச சுமமையு மேழகத தொலியும
அனறி நாயகுரைய போசையு மாடவ ராாபபும
ஓனறி யூளைவாய நரிக்குரற கொபபதுண டொருசாா. ௬௧

கஙகு லெலலைகா ணியநகா கணவிழித தாஙகு
மஙகு ளேயபெரு வாயிலக டிறததலு மாரு
தெஙகு மீணடிய நாியெலா மிமமென வோடிப
பொஙகு காாிருட டுணியெனப போயின கானம. ௬௨

ாறி லாசசிவ பராஞசுட ாிரவிவந தெறிபபத
தேறு வாாிடைத தோனறிய சிறுதெய்வம போல
மாறி லாதபன செஙகதிா மலாநதுவா ளெறிபப
வீறு போயொளி மழுஙகின மீனகண மெலலாம ௬௩

அணட ருககாி தாகிய மறைபபொரு ளழுகைத
தொணட ருககெளி தாகிமண சுமநதருள வருததங
கணட ருடகழல வருமவான கைகளா யிரமுங
கொணட ருககவெங கடவுளுங குணகட லுதிததான. ௬௪

கவன வெமபாி செலுததிமேற கவலைதீாந துளளே
சிவமு ணாநதவா சிநதைபோன மலாநதசெங கமலம
உவமை யிலபரம பொருளுணாந துரையிறந திருநதோா
மவுன வாயென வடஙகின மலாநதபைங குமுதம. ௬௫

பநதி யாளாகள் யாதெனப பகாதுமென றசசஞ
சிநதி யாவெழுந தொலலைபோயத திரணமதங கவிழ்ககுந்
தநதி யானர சிறைகொளு மிருககையைச சார்நது
வநதி யாவுடல பணிபபுற வநதது மொழிவாா. ௬௬

காறறி னுஙகடுங கதியவாய்க கணகளுக் கினிதாய*
நேறறு வநதவாம பாியெலா நினறவாம பாிககுக
கூறறெ னுமபடி நாிகளாய நகரெலாங குழுமி
ஊறறஞ செயதுபோயக காடடகத தோடிய வென்றாா. ௬௭

கருதது றுதவிச சொலலெனுங கடியகால செவியாந
துருததி யூடுபோய்க கோபமாஞ சுடுதழன மூடடி
எாிதத தீபபொறி சிதறிடக் கணசிவந திறைவன
உருதத வாயுகண டமைசசரும வெருவினு ரொதுஙகி. ௬௮

---

(பா - ம்.) *கட்கினியனவாய்.

அமுத முண்டவ னுஞ்சமுண் டாலென முதனாட்
சமர வெம்பரி மகிழ்ச்சியு டாழ்ந்தவ னவையே
திமிர வெங்குறு நரிகளாய்ச் சென்றவே யென்னு
அமர ரஞ்சிய வாணையா னுரைஞ ராழ்ந்தான் ௫௯

[அறுசீரடியாசிரிய விருத்தம்.]

அருகிருக்குந் தொல்லமைச்சர் தமைநோக்கி
வாதவூ ராளி யென்னும்
ஒருகிருட்டு மனக்கள்வ னெம்முடைய
பொருண்முழுதுங் கவர்ந்து காட்டிற்
குருதிநிணக் குடர்பிடுங்கித் தின்றுதிரி
நரிகளெல்லாங் குதிரை யாக்கி
வெருவிடுத்தா னிவன்செய்த மாயமிது
கண்டீரோ மதிநூல் வல்லீர் ௬௰

இம்மாயஞ் செய்தானை யென்செய்வ
தெனவுலகி லெம்மருக் கெல்லாம்
வெம்மாசு[illegible]டுபாவம் பழியிரண்டும்
படவிழுக்கு விளைத்தத் தீய
கைம்மாறு கொன்றுன்றன் பொருட்டினியா
மேதுரைச்சக் கடவே மென்று
சும்மாது சிரந்தூக்கி யெதிராடா
திருந்தாரச் சூழ்வல் லோர்கள். ௬௧

அவ்வேலை மனக்கினிய பரிசெலுத்தி
யரசகா ரியநன் றாக்கி
வெவ்வேலை மனக்கவலை விடுத்தனமென்
றகமகிழ்ச்சி விளைவு கூர
மைவேலை விடமுண்ட வானவனை
நினைந்தறிவு மயமா மின்ப
மெய்வேலை யிடைவீழ்ந்தார் விளைந்ததறி
யாரவந்தார் வேந்தன் மாடே ௬௨

வந்தவரைச் சிவந்தவிழிப் பொறிசிதறக்
கடுகடுத்து மறவோ னோக்கி
அந்தமிலாப் பொருள்கொடுபோய் நல்லவயப்
பரிகொடுவந் தழகி தாக்கத்
தந்தனையன் றோவரசக் கருமமுடித்
திசைநிறுத்தத் தக்கோர் நின்போல்
எந்தவுல குளரேயோ வென்வெகுண்டா
னதுகேட்ட வீசன் றொண்டர். ௬௩

குற்றமே தபபுரவிக் கெனககேட்டார
கோமகனுங் குற்ற மேதும
அற்றதா லரையிரவி னரியாகி
யயனினற புரவி யெலலாஞ
செற்றுவார் குருதியுக நிணஞசிதறக
குடர்பிடுங்கித தினறு நோவந
துற்றபோக கூறறமிழைத தூாகலங்கக
காட்டகததி லோடிற றன்றே. ௪௪

கண்ணுமிடு கவசமுமபோற் காரியஞசெய்
தொழுகியதுங காலம பாாதசெதம
எண்ணரிய நிதியீட்டங கவாவதறகோ
னினமைசசி னியறகை நனறுற்
புண்ணியவே தியாமரபிற பிறநதனமென்
றொருபெருமை பூணடா யேநீ
பண்ணியகா ரியமபழுது பிறராகிற
றண்டிககப படுவ ரெனறுன ௪௫

தண்டலா ளாகளிவனைக கொடுபோயநம
பொருணமுழுநந தடுததுமீாததும
மிண்டினல வலிசெய்தும வாஙகுமென
வெகுணடரசன விளமபக கூறறு
மண்டுமேன மறஞசெயயும வலியுடையாா
கதிரையிரு ளடுததுப பறறிக
கொணடுபோ ஞலெனனைக கொடுபுறயபோ
யறவோரைக கொடுமை செய்வாா. ௪௬

கதிாகோகஙிக கனன்மூட்டுங கடுமபகலுச
சியிலிரவிக கடவு ணோாகின
றெதிாநோகக நிலைநிறுததிக கரஙகளினு
றுதலினுஙகல லேறறிச செநதீட
பிதிாநோககத தவரொாறுபட வாற்றுராய்
வீழநதிருளைப பிரபபோன செநதீ
மதிநோககத தனிசசுடரை யழைததழுது
துதிசெயவாா வாத வூரா. ௪௭

[கொசசகககலிப்பா.]

நாதவோ நாத முடிவிறந்த நாடகஞ்செய்
பாதவோ பாதகனு மென்னைப் பணிகொண்ட
வேதவோ வேத முடிவின் விளைந்ததனிப
போதவோ போத நெறிகடநத பூரணவோ ௪௮

ஐயவோ வென்னுடைய வன்பவோ வன்பர்க்கு
மெய்யவோ மெய்யில் வினையேன் றலைவைத்த
கையவோ செய்யகழற் காலவோ காலனைக்காய்
செய்யவோ வேதப் பரியேறுஞ் சேவகவோ. ௪௯

அத்தவோ கல்லாக் கடையேனை யாட்கொண்ட
பித்தவோ பொய்யுலகை மெய்யாகப் பேதிக்குஞ்
சித்தவோ சித்தந் தெளிவித்த தென்னைத்தந்த
முத்தவோ மோன மயமான மூர்த்தியவோ. ௫௰

[ஒருபோகு கொச்சகக் கலிப்பா]

என்றேறிய புகழ்வேதிய ரிரங்குந்துதி செவியிற்
சென்றேறலு மிடையேறுசுந் தரனமறறிவா செயலை
மன்றேறவு முடிமேனதி மணமேறவு முதியாள்
அன்றேறிய தேரோடுமின் னடைந்தேறவு நினைந்தான். ௫௧

கங்கைப்புனல் வடிவாகிய கவ்வைத்திரை வையைச்
சங்கச்சரி யறலாமலர்த் தாரோதியை நோக்கா
வங்கக்கடல் பேரூழியில் வருமாறென வெவ்வரும்
இங்கற்புத மடையப்பெரு கென்றானருள் குன்றான. ௫௨

தும்பைச்சடை முடியானொரு சொல்லாடவு முன்னாள்
வம்பைப்பொரு முலையாலவரி வளையாலவடு வழுத்துங்
கொம்பைத்தவங் குலைப்பானடுங் கோபங்கொடு நடக்குங்
கம்பைப்பெரு நதியிற்கடுங் கதியால்வரும் வையை. ௫௩

பத்திக்குளிர் கமுகின்குலை பரியக்கரை முரியக்*
குத்திப்பழஞ் சிதறச்செறி கோட்டங்களை வீட்டி
முத்திக்கொடு கதலிப்புதன் முதுசாலிக ளரித்துத்
தத்திப்பல தருவேரொடுந் தள்ளிக்கடு கியதே ௫௪

பல்லாயிரஞ் செந்தாமரை பரப்பிக்கொடு வரலால்
நல்லாயிரங் கண்ணனெழி னயக்குங்குளிர் நளினங்
கல்லாரமுங் கடிமுல்லையுங் கரும்புங்கொடு வரலால்
வில்லாயிரங் கொடுபோர்செயும் வேள்வீரனு மானும் ௫௫

மணிமாலையு மலர்மாலையுஞ் சிதறுவிறு மருங்கே
அணிகாஞ்சியு மொளிர்சங்கமு மலறப்புடை யெறியாக்
கணியாவெழின் முகதாமரை கண்ணீரொடுங் கவிழாத்†
தணியாமுனி வுடனாடிய தடங்கண்ணியர் போலும். ௫௬

(பா - ம்.) *பரித்துக் கரை முரித்து. †கவிழ.

வரையுந்திய மதுமுல்லையி னெய்பாறயிர மருதத்
தரையுந்திய கருமபின்குறை சாறேடுவ ராறே
டிரையுந்தெழு தூநீரவைவை யிந்நனன்கா வைகுந்
திரையுந்தெழு கடறமமிடனு சென்றலைவை போலும். ௫௭

கல்லென்றதிர சுமமைப்புனல கடிமாமதிற் புறமபோய்
இல்லஙகளுஞ சிறு துசசிலு மறிததிடடிருங கடலவாயச
செலலுங்கல நாவாயபல திமிலபோறசமந தேகிப
புலலுமபுரி சையுந்தளளியுள புகுகினறதை யனறே. ௫௮

மறுகுமபல பொருளாவண மணிவீதியு மன்றுஞ
சிறுகுஙகண மதமாநிரை சேருநதெரு வுமபோய
முறுகுஞசின மொடுதெணடிரை மூரிபபுன றவிக
குறுகுமபடி கணடஞசினா கொடிமாநக ருள்ளார். ௫௯

சிலரமைநதரை யெடுபபாரகளுஞ சிலரமைநதரைக காணு
தலமநதழு வாருஞசில ரஙகைததளிர பறறிக்
குலமஙகையா தமைகொணடுயப போவாரகளுங குறுகுந
தலமெஙகெனத திகைபபாரகளுந தடுமாறுகின றாரும ௬௰

பொனனுளளன பணியுளளன பொருளபேணலசெய வாரும
மன்னுஞசில பொருளைககொள மறபபாரகளு மாடம
மின்னுஙகொடி நெடுமாளிகை மேலேறுகின றாரும
இந்நனனகா துயாமூழகுதற கேதெதுவென பாரும். ௬௧

நேறறுமபரி நரியாயின நெடுமாநக ரெஙகும
ஊறறஞசெயத வெனபாரகளு மொருகாலமு மிநத
ஆறறினபெருக கிலலையெனறயா வாருஙகட லரசன்
சீறறஙகொடு முன்போலவருஞ் செயலேகொலென பாரும. ௬௨

அங்கோமகன் செஙகோலபிழைத தனறோவென நவில்வார்
அஙகோலவளை பஙகனவிளை யாடடோவென வறைவார
இஙகாரிது தணிப்பாரென விசைபபாரிது தணிபபான்
பொங்காலமுண் டருளசுநதர னலதியாரெனப புகல்வார். ௬௩

அடுததாயிரங் குணடோதர ரெதிரேறறிருந தகல்வாய்
மடுததாலுமி தடஙகாதென மதிப்பாரிது தனையும
எடுததாயிர முககஙகையி னிறைவன்சடை யேறக்
கொடுததாலல தடங்காதிதன கொடுங்கோபம தென்பார். ௬௪

வாறுமிழி நதியாயிர முகத்தாலவரு வதுபோல்
ஆறெழு நீத்தநத்தணி யாவாறுகண டன்பு
தாஞகிய சிவனனபரை யொறுக்குநதறு கணணா
போனூதம தகதேயுள பொருளபேணுதல கருதா சஙு

[அறுசீரடியாசிரிய விருததம]

வழுதிதன றமாவிட டேக மதுரைநா யகனபாலேகி
அழுதிசை பாடுந தொண்டி லகபபடும பாதம போறறித
தொழுதுகொண டறிவா யூறுஞ சுகபபெருங கடலின மூழ்கி
எழுதுசித் திரமபோன் மனஞி யிருநதனா வாதவூரா சுசு

ஆகச செயயுள - உ,கககக



அறுபத்தொன்றாவது

# மண் சுமந்த படலம்

---

[எழுசீரடியாசிரிய விருத்தம்]

பஞ்சு மந்தமறை நாட ரும்பொருள்
பதஞ்சு மந்தமுடி யார்மனம்
புஞ்சு மந்ததுயர் தீர வந்தபரி
நரிக ளாயடவி போனபின்
விஞ்சு மந்தசுர நதியெ னப்பெருகு
வித்த வையையிது விடையவன்
மஞ்சு மந்ததிரு மேனி மேலடி
வடுச்சு மந்தகதை யோதுவாம். ௧

கருங்க டற்றிரை யிடைக்கி டந்துசுழல்
கலமெ னக்கல முகடளாய்
வரும்பு னற்பரவை யுட்கி டந்துநகர்
மறுகி யுட்கமற வேலினை
ஒருங்க மைச்சரை விளித்து நீர்கரை
சுமந்தொ துக்கிவரு மோதநீர்ப
பொருங்க தத்தினை யடக்கு வீரென
வமைச்சருந் தொழுது போயினார். ௨

வெறித்த தடக்கைமத யானை மந்திரிகள்
வேறு வேறுபல குடிகளுங்
குறித்தெ டுத்தெழுதி யெல்லை யிட்டளவு
கோல்கி டத்திவரை கீறியே
அறுத்து விட்டுநக ரெங்க ணும்பறை
யறைந்த ழைத்துவிடு மாளெலாஞ்
செறித்து விட்டவ ரவர்க்க ளந்தபடி
செய்மி னென்றுவரு வித்தனர். ௩

மண்டொ டுங்கருவி கூடை யாளரு
மரஞ்சு மந்துவரு வார்களும்
விண்டொ டும்படி நிமிர்ந்து வண்டுபடு
விரிபசுந் தழைப லாலமும்

கொண்ட திரததவரு வரும மேவறுபல
கோடி கூடிய குழாமுநீர்
மொண்ட ருநதவரு மேக சாலமென
வருபு னறகரையின் மொய்த்தனர் ௪

கிட்டு வார்பரி திறுதரது வாரரவு
ருட்டு வாரடி கிடததுவார
இட்டு வாரதழை திரபபு வாரவிளி
யெழுப்பு வாரபறை யிரட்டுவார
வெட்டு வார்மணை லெடுதது வாரசெல
வெருட்டு வாரகடிது துடுமெனக
கொட்டு வார்கரை பரபபு வாருவகை
கூரு வார்குரவை குழறுவார ரு

கட்டு வாரகரை யுடைப்ப* நீரகடுகல
கண்டு நெஞ்சது கலங்குவார
மட்டி லாதமுனி வெனனை யன்னையினி
யாறு கென்றெதிா வணஙகுவார்
கொட்டு வார்மணை லுடைபப டஙகமகிழ்
கொள்ளு வாரகுரவை துளளுவார
எட்டு மாதிரமு மெடட வாயொலி
யெழுப்பு வாரபறை யிரடடுவார. சு

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

)ந்நிலை யூரி லுள்ளார் யாவர்க்குங் கூலி யாளா
ரன்னிமுன் னனாத வெல்லைத தொழின்முறை மூண்டு செய்வார
)நநிலை நகரின் றெனகீழத திசையுளா ளளவி லாணடு
ன்னிய நரைமூ தாட்டி யொருததிபோ வநதி யென்பாள். ௭

)சவியுண வான வேத சிரபபொரு ளுணர்நது செநநீ
)வியுண வூட்டு மீச னன்பரி னுறற நோறற
)வநிறை பேறு துயபபா டாயிலாக கனனை யொபபாள்
வையுறு பிட்டு விற்றுண டொழிலினு டமிய ளாவாள். அ

)வகளு மவித்த செவ்விப் பிட்டினை மருங்கு நான்கு
)கைகளாய் முளைத்த முக்கட் கருமபினை யருமபு மூரற்
)செய்கதிர் முகத்தா னந்தத் தேறலை யால வாயெம
)யனை யகததா னோக்கி யன்பினு லருததி விறபாள். கூ

---

(பா - ம்.) * கரையுடைப்பு.

வளைந்தமெய் யுடைய வந்த மாதவ நரைமூதாட்டிக்*
களைந்தபங் கடைப்பான் கூலி யாள்கிடை யாம லாற்றத்
தளர்ந்தினி யென்னே மன்னன் றண்டிக்கி னென்செய் கேனென்
றுளைந்தடு மாறிக் கூட லுடையநா யகனை யுன்னா. ௰

பிட்டுவிற் றுண்டு வாழும் பேதையே னிடும்பை யென்ப
தெட்டுணை யேனு மின்றி யிரவியெங் கெழுகென் றிந்நாண்
மட்டுநின் னருளா லிங்கு வைகினேற் கின்று வந்து
விட்டதோ ரிடையூ றைய மீனவ னாணை யாலே ௧௧

துணையின்றி மக்க ளின்றித் தமரின்றிச் சுற்ற மாகும்
பணையின்றி யேனுங் கொள்வா ரின்றிப் பற்றுக் கோடாம்
புணையின்றித் துன்பத் தாழ்ந்து புலம்புறு பாவி யேற்கின்
றிணையின்றி யிந்தத் துன்ப மெய்துவ தறனோ வெந்தாய் ௧௨

தேவர்க்கு மரிய னாகுந் தேவனே யன்ப ராவார்
யாவர்க்கு மெளிய னாகு மீசனே வேந்த னாணைக்
காவற்செங் கோலார் சீற்றங் கடுகுமுன் கூலி யாளாய்
ஏவற்செய் வாரைக் காணே னேழையே னினியென் செய்கேன். ௧௩

கூலியாள் வருவ துண்டோ வென்றுதன் கொங்கை முற்றத்
தாலிபோற் கண்ணீர் சோர்வாள் குறித்தது முன்பருத்தும் பிட்டை
வேலைநீர் ஞாலங் காண மிசைந்தவ னிடும்பை தீர்ப்பான்
பாலினேர் மொழியாள் பாக மறைத்தருட் படிவங் கொள்வார். ()

குறட்குநீ ரருத்தி வையைக் குடிஞையா யொழுகுங் கங்கை
அறற்குழல் பிரிவி னாற்றுந் தன்பிணா லவளைக் காண்பான்
மறக்கய னெடுங்க ணாளை வஞ்சித்து வடிவ மாறிப்
புறப்படு வாரைப் போலப் போதுவார் போத மூர்த்தி ௧௫

[கொச்சகக் கலிப்பா]

அழுக்கடைந்த பழந்துணியொன் றரைக்கசைத்த விழுத்தொண்டர்
குழுக்கடந்த விண்டைநிகர் சுமையடைமேற் கூடைகவிழ்த்
தெழுக்கடந்து திசைகடந்திட் டிணைகடந்த திருத்தோண்மேன்
மழுக்கடைந்து விளங்கியவாய் மண்டொடுதிண் படையேந்தி. ௧௬

இடங்காதல் கொண்டறவோர் திருவேள்வி தருமமுதும்
இடங்காவல் கொண்டுறைவா ரருத்தமுது மினிதுண்டும்
அடங்காத பசியினர்போ லன்னைமுலைப் பாலருந்த
மடங்காத பெருவேட்கை மகவுபோற் புறப்பட்டார். ௧௭

---

(பா- ம்.) *மூதாட்டி.

ஆலுமறைச் சிரமுடியா ரடிக்கமல நிலஞ்சூடக்
கூலிகொடுத் தென்வேலை* கொள்வாருண் டோவென்றென்
றோலமறைத் திருமொழிபோ லுரைபரப்பிக் கலுழ்கண்ணீர்
வேலையிடைப் படிந்தயா வாள வீதியிடத் தணைகின்றாள். ௧௮

தந்தைதாய் பிறரின்றி வருகின்ற தனிக்கூலி
மைந்தனார் வாய்மலருங் குரல்கேட்டு வந்தியுந்தன்
சிந்தையார் குலமிழுந்து நல்கூர்ந்தார் செல்வமகத்†
தந்தபோ தெழுமகிழ்ச்சி தலைக்கொள்ளப் புறம்போந்தாள். ௧௯

அன்னையெனத் தன்பாலி னருள்சுரந்து வருகாளை
தன்னையழைத் தெனக்களந்த கரையடைத்துத் தருவாயோ
என்னவிசைத் தனளாக வடைக்கின்றே னெனக்கன்னை
பின்னையதற் கிடுங்கூலி யாதென்றார் பெருமுதியாள் ௨௰

பிட்டிடுவே னுனக்கென்றா ளதற்கிசைந்து பெரும்பசியாற்
சுட்டிடநான் மிகமெலிந்தேன் சுவைப்பிட்டி னுதிர்ந்தவெலாம்
இட்டிடுவா யதுமுந்தத் தின்றுநா னிளைப்பாறிக்
கட்டிடுவே னினதுடைய கரையென்றார் கரையில்லார். ௨௧

தெள்ளியடு சிற்றுண்டி சிக்கடைந்த பொதிநீக்கி
அள்ளியெடுத் தருந்தப்பா வென்றிட்டா ளரைக்கசைத்த
புள்ளியுடைத் துகிலீர்த்தார் புறத்தானை விரித்தேந்தி
ஒள்ளியதென் றவளன்பு முடன்கூட்டி யமுதுசெய்வார். ௨௨

அன்னைமுலைத் தீம்பாலி னரியசுவைத் திஃதென்றத்
தென்னவனா யுலகாண்ட திருவால வாயுடைய‡
மன்னாபிரான் றனக்கேயா மென்றென்று வாய்ப்பெய்து
சென்னியசைத் தமுதுசெய்தார் தீவாயநஞ் சமுதுசெய்தார். ௨௩

தந்தையொடு தாயின்றித் தனிக்கூலி யாளாக
வந்தவெனக் கொருதாயா யருள்சுரந்து மாறாத
இந்தவிளைப் பொழித்தனையே யினிவேலைத் தலைச்சென்றுன்
சிந்தைகளிப் பெழவேலை செய்வேனென் றிசைத்தெழுந்தார். ௨௪

தந்திவாய் மருப்பிடறி வருங்குடிலைத் தடங்கரையில்
வந்தியான் வந்தியா ளெனவேட்டில் வரைவித்துப்
புந்தியா லுரையானூற் பொருளினா லளப்பரிய
அந்திவான் மதிச்சடையார் கரையடைப்பா ராயினார். ௨௫

(பா - ம்.) * எனை வேலை. † செல்வமிக. செல்வமகம். ‡ வாய்மலர்ந்து

வெட்டுவார் மண்ணைமுடி மேல்வைப்பார் பாரமெனக்
கொட்டுவார் குறைதெடுத்துக் கொடுபோவார் சுமடுவிழத்
தட்டுவார் சுமையிறக்கி யெடுத்ததனைத் தலைபடியக்
கட்டுவா ருடன்சுமந்து கொடுபோவார் கரைசொரிவார். ௨௬

இவ்வண்ண மிவரொருகா லிருகால்மண் சுமந்திளைத்துக்
கைவண்ண மலர்கன்றக் கதிர்முடிமேல் வடுவழுந்த
மைவண்ண னறியாத மலரடிசெம் புனல்சுரந்து
செவ்வண்ணம் படைப்பவொரு செழுந்தருவின் மருங்கணைந்தார் ௨௭

தருமேவு மலைமகளுஞ் சலமகளு மறியாமற்
றிருமேனி முழுதுநில மகடீண்டத் திளைப்பெய்தக்
குருமேவு மதிமுடியைக் கூடையின்மேற் கிடத்தி
வருமேரு வளையாதம் வடிவுணர்ந்து துயிலகின்றார். ௨௮

அத்தருவே யாலநெடுந் தருவாக வலைபுரட்டித்
தத்திவரும் புனலடைப்பார் சனகாதி முழுதுணர்ந்த
மெய்த்தவராய்க் கணகளிப்ப மெய்யுணர்ச்சி மோனமயச்
சுத்தவுருத் தெளிவிப்பா ரெனத்துயிலுந் துயிலுணர்ந்தார். ௨௯

ஆடுவார் சாமமெனத் திதிக்கு மமுதவிசை
பாடுவார் நகைசெய்வார் தொழில்செய்வார் பராக்கடையக்
கோடுவார் மணல்குவிப்பார் குதிப்பார்தூ ளெழவடிபாய்ந்
தோடுவா ருடன்மீள்வா ருன்மத்த ரெனவிருப்பார். ௩0

வேலையினு லறவருந்தி யிளைத்தார்போன் மெய்வேர்வை
காலமிசை மூசசெறிந்து வாயொலியாற் காற்றழைத்துச்
சாலநெடும் பசியினார்போற் றளர்ந்தடியா ளிடுமபிட்டின்
மேலடைந்த விருப்பினராய் மீண்டுமவள் பாலணைவார். ௩௧

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

இடும்பைநோய் வெள்ள நீந்தி யின்பநீர் வெள்ளத் தாழ்ந்த
கொடும்புற முதியாண் முன்போய்க் கூறுவார் கோலுக் கேற
இடம்படு கரைக ளெல்லா மடைபடு கின்ற வின்னங்
கடும்பசி யுடையே னன்னே பிட்டிடு கடிதி னென்றார். ௩௨

ஆங்கவ ளப்போ தட்ட சிற்றுண வளித்தா ளையர்
வாங்கிய கையு நாவுங் கனலெழ வாயிற் பெய்து
பாங்கிரு கொடிறு மொற்றிப் பதமுறப் பருகிக் கொண்டு
தீங்கிழைப் போலப் போர்த்து நெடுங்கரை யடைக்க லுற்றார். ௩௩

பிட்டுவாய் மிதப்ப வுண்பார் பெருவலி யுடையார் போல
வெட்டுவா ரெடுத்த மண்ணைக் கொண்டுபோய் வேற்றுப் பங்கிற்
கொட்டுவா ருடைப்பு மாறுங் கொள்கைகண் டார்த்துத் தின்போன்
தட்டுவா ரயனின் ருரைத் தழுவுவார் களிப்புத் தாங்கி. ௬௪

எடுத்தமண் கூடை யோடு மிடறிவீழ வார்போ லாற்றின்
மடுத்திட வீழ்வா நீந்தி வலலைபோய்க் கூடை தள்ளி
எடுத்தகன் கரைமே லேறி யடித்தடித் தீரம் போக்கித்
தொடுத்தகட் டவிழப்பா மீளத் துன்னுவா தொடுவா மண்ணை ௬௫

கொட்டுமண் சுமந்து செல்வா கூடையை யுடைப்பில வீழ்த்
தட்டுவ ரெடுப்பார் போலத் தாவிவீழ்ந் தலையி லோட
விட்டொரு மரத்தைப் பற்றி மிதப்பாதின் கரையி லேற
முட்டுவா சுழியி லாழ்வர் சேட்சென்று மூளைப்பா மீள்வர். ௬௬

கொட்டினைக் கழலப் பார்ப்பார் கோப்பார்கோ லிடையாப் பிட்டுத்
தட்டுவ ருயிர்ப்பு வீங்கித் தள்ளரின் றிளைப்பா கச்சிற
பிட்டினை நுகர்வா வேலை வினைகெட்ப பிறாக்கு மள்ளி
இட்டுமா ரேச்ச நோக்கிக் கைப்பாகை யிரண்டுந் தாங்கி.* ௬௭

வானத்தின் மண்ணிற் பெண்ணின் மைந்தரிற் பொருளி லாசை
தானற்றுத் தமையு நீத்துத் தத்துவ முணர்ந்த யோகா
ஞானக்கண் கொண்டே யனறி நாடருஞ் சோதி மண்ணோ
ஊனக்கண் கொண்டுங் காண வுடன்விளை யாடல் செய்வா. ௬௮

அருளினு லுலக மெல்லா மாக்கியு மளித்து நீத்தும்
பெருவிளை யாடல் செய்யும் பிறைமுடிப் பெருமா னிங்ஙன்
ஒருவிளை யாடல் செய்ய வோச்சுகோற் கைய ராகி
அருகுநின் றேவல் கொள்வா ரடைகரை நோக்கப் புக்கார் ௬௯

கெட்டலை யொதுங்கி யோட நிவப்புற வரைபோ லிடுக்
கட்டிய கரைக ளெல்லாங் கண்டுகண் டொப்பு நோக்கி
அட்டமே செல்வார் திங்க ளாயிரந் தொழுதாள் பேரால
விட்டபங் கடைப டாமை கண்டனா வெகுள் மூண்டார். ௭௰

வந்திக்குக் கூலி யாளாய் வந்தவன் யாரென் றோடிக்
கந்தர்ப்ப னென்னோ நின்ற காளைப நோக்கி யேடா
அந்தப்பங் குள்ள வெல்லா மடைபட்ட தெவனீ யின்னம்
இந்தப்பங் கடையாய் வாளா திருத்தியா றமபீ யென்றார். ௭௧

(பா - ம்.) சுதாங்கி.

வேறுரை யாது தம்மை யுணர்ந்தவர் வீறு தோன்ற
ஈறிலா னிறுமாப் பெய்தி யிருந்தன னாக மேலிட்
டாறுவந் தடுத்த பங்கி லடைகரை கல்லிச் செல்ல
மாறுகொண் டோச்ச வஞ்சி மயங்கினா வலிய கோலார். ௪௨

பித்தனோ விவன்றா னென்பா ரல்லது பேய்கோட் பட்ட
மத்தனோ விவன்றா னென்பார் வந்தியை யலைப்பான் வந்த
எத்தனோ விவன்றா னென்பா ரிந்திர சாலங் காட்டுஞ்
சித்தனோ விவன்றா னென்பா ராரென்றுந் தெளியோ மென்பார். ௪௩

பாடல்விஞ் சையனோ வென்பார் பண்ணிறை பாணிக் கேற்ற
ஆடல்விஞ் சையனோ வென்பா ரரும்பெற்ற செல்வந் தாழ்ந்து
வாடிய மகனோ வென்பா ரிசைபட வாழ்ந்து கெட்ட
ஏடவிழ் தாரி னாருள் யாமக னிவன்கொ லென்பார். ௪௪

கரும்பனும் விரும்ப நின்ற கட்டழ குடைய னென்பார்
அரும்பெற லிவனான் கூலிக் காட்செய்த தேவனோ வென்பார்
இரும்பெருங் குரவ ரற்ற தமியனோ வென்பார் வேலை
புரிந்தவ னல்ல னென்பா ரதுமேனி புகலு மென்பார். ௪௫

கூலியுங் கொண்டான் றானே கணக்கிலுங் குறிக்கச் சொன்னான்
வேலையுஞ் செய்யா னின்சொல் விளம்பினுங் கேளான் கல்லின்
பாலறை முளையே யாகிப் பராமுகம் பண்ணி நின்றான்
ஏலநா மிதனை வேந்தற் குணர்த்துது மென்று போனார். ௪௬

தலைமகன் றிருமுன் றாழ்ந்து சாற்றுவா ரடிகே ளிந்த
அலைபுன னகரார் தத்தம் பங்கெலா மளந்த வாற்றான்
மலையினும் வலிய வாகச் சுமந்தனர் வளைந்த சிற்றாண்
விலைநரை யாட்டி தன்பங் கடைத்திலள் வென்றி வேலோய். ௪௭

வேளையும் வனப்பி னாலே வென்றவ னொருவன் வந்தி
ஆளென வங்கே வந்து பதிந்தன னரசா செல்வக்
காளைபோற் களிப்பன் பாடு மாடுவன் காலம் போக்கி
நீளுவன் வேலை யொன்று நெஞ்சினு நினைதல் செய்யான். ௪௮

ஆண்டகை வனப்பை நோக்கி யடிக்கவுங் கில்லே மஞ்சி
ஈண்டினே மென்று கூற விம்மென வமைச்ச ரோடும்
பாண்டிய னெழுந்து நாம்போய்ப் பங்கடை பட்ட வெல்லாங்
காண்டுமென் றெதிர்நீர் வையைக் குடிஞையங் கரையைச் சார்ந்தான். ௪௯

எடுத்ததின் கரைகளெல்லா மிறைமக னுள்ளத் தேர்கை
மடுத்தன னோக்கிச் செல்வான் வந்திபங் கடைப்பா ரின்றி
அடுத்தநோன கரையுங் கலலி யழித்தெழு வெள்ள நோக்கிக்
கடுத்துநின் றெங்ஙூற் றுனிக் கரைசுமந் தடைப்பா னென்றான். ௫௰

வள்ளறன் கோபங்கண்ட மூறுகோற் கைய ரஞ்சித்
தள்ளருஞ் சினத்த ராகித் தடக்கைதொட் டோத்துப் பற்றி
உள்ளொடு புறங்கீழ் மேலா யுயிர்தொறு மொளித்து நின்ற
கள்வனை யிவன்றான் வந்தி யாளெனக் காட்டி நின்றார். ௫௧

கண்டனன் கனன்று வேந்தன் கையிற்பொற் பிரம்பு வாங்கி
அண்டமு மளவி லாத வுயிர்களு மாக மாகக்
கொண்டவன் முதுகில் வீசிப் புடைத்தனன் கூடை யோடு
மண்டணை யுடைப்பிற் கொட்டி மறைந்தன னிறைந்த சோதி. ௫௨

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

பாண்டியன் முதுகிற் பட்டது செழியன்
பன்னிய ருடம்பினிற் பட்ட
தாண்டகை யமைச்சர் மேனிமேற் பட்ட
தரசிளங் குமரர்மேற் பட்ட
தீண்டிய கழற்கால் வீரர்மேற் பட்ட
திவுளிமேற் பட்டது பரும
பூண்டவெங் கரிமேற் பட்டதெவ் வுயிர்க்கும்
போதன்மேற் பட்டவத் தழும்பு. ௫௩

பரிதியு மதியும் பாம்புமைங் கோளும்
பன்னிறம் படைத்தநாண் மீனும்
இருநிலம் புனல்கா லெரிகடுங் கனல்வா
னென்னுமைம் பூதமுங் காருஞ்
சுருதியு மாறு சமயவா னவருஞ்
சுரர்களு முனிவருந் தொண்டின்
மருவிய முனிவர் கணங்களும் பட்ட
மதுரைநா யகனடித் தழும்பு. ௫௪

வானவர் மனிதர் நரகர்புள் விலங்கு
மாசுணஞ் சிதலெறும் பாதி
ஆனபல் சரமு மலைமரங் கொடிபுல்
லாதியா மசரமும் பட்ட
ஊனடை கருவும் பட்டன தழும்போ
டுதித்தன வுயிரிலோ வியமுந்
தானடி பட்ட சராசர சடங்க
டமக்குயி ராயினோன் றழும்பு. ௫௫

துண்ணென மாயோன் விழித்தனன் கமலச்
சோதியு மயர்த்தனன் வியந்தான்
விண்ணவர் பெருமான் வெருவினன் வானோர்
வேறுளார் மெய்ப்பனிப் படைந்தார்
வண்ணயா ழியக்கர் சித்தர்சா ரணர்தம்
வடுப்படா வுடம்பினிற் பட்ட
புண்ணையா தென்று தத்தமிற் காட்டி
மயங்கினார் புகுந்தவா றறியார். ௫௬

ஏகநா யகனெவ் வுயிர்களுந் தானே
யெனபது மன்பினுக் கெளியன்
ஆகிய திறனுங் காட்டுவா னடிபட்
டங்கொரு கூடைமண் கொட்டி
வேகநீர் சுருங்கக் கரையினை யுயர்த்தி
மிகுத்துடன் வேலைநீத் தொளித்துப்
போகிய வாறு கண்டுகோ றகையார்
போய்நரை யாட்டியைத் தொடர்ந்தார். ௫௭

வன்புதாழ் மனத்தோர் வலிசெய வின்ன
மன்னனுன் மறுக்கமுண் டேயோ
முன்புபோ கியவா ளெனசெய்தா ளென்னாய்
முடியுமோ வினியெனத் திரங்கி
என்புபோல் வெளுத்த குழலினாள் கூட
லிறைவனை நோக்கினின் றிரங்க
அன்புதே னாக வருத்திய சிற்றா
ணமுதுசெய் தருளினா ரருளால். ௫௮

கண்ணுத னாதி கணத்தவர் விசும்பிற
கதிர்விடு திப்பிய விமானம்
மண்ணிடை யிழிச்சி யன்னைவா வென்று
வல்லைவைத் தமரர்பூ மழையும்
பண்ணிறை கீத வோதையும் வேதப
பனுவலும் துந்துபி யைந்தும்
விண்ணிடை நிமிரச் சிவனரு ளடைந்தோர்
மேவிய சிவபுரத் துய்த்தார். ௫௯

மன்றுடை யானோர் கூடைமண் கொட்டி
மறைந்தது மடைக்கரை நீண்ட
குன்றென வுயர்ந்த தன்மையுந் தம்மேற்
கோலடி பட்டது நோக்கி

என்றன்மேற் பட்ட தென்றன்மேற் பட்ட
திதுவென வதுவென வகைமசசா
நின்றவ ருணர்த்து நிகழ்ச்சியும பிறாபா
னிகழ்ச்சியு நோககியந் நிருபன ௬௰

[அறுசீரடியாசிரியவிருத்தம்.]

உள்ளததா சஙகை பூணடா ளுகமண் ணுடைப்பிற கொட்டிக்
கள்ளததா ராகிப போனா ககனத்தா ராகிச சேனை
வெளளத்தா பிறருங கேட்ப மீனவற குவகை வெள்ளங
கொளளததா மழைததா காய வாணியாற கூற லுற்றா. ௬௧

மறத்தாறு கடநத செஙகோல வழுதிநின் பொருளக ளெல்லாம்
அறத்தாற்றி னீட்டப படட வனையவை புனித மான
திறத்தாலே நமககு நமமைச சேரநதவா தமககு மாாவம
உறததாவில வாத வூர னுதவின னுத லாலே. ௬௨

அனையனை மறுககஞ செய்தா யருமபிணப புலவுத் தீவாய்
வனநரித திரளை யீட்டி வாம்பரி யாககித தநதேங
கனையிருட கஙகுற போதிற கழிநதன பின்னுந தணட
வினையாபால விடுததுத துனபம விளைததனை யதுபொ றுத்தேம். ௬௩

வருபுனல் பெருகப பாாததேம வநதிகைப பிட்டு வாஙகிப
பருகிவந் தாளாய மாறு படடன மணபோ கடடிப
பொருகரை யுயரச செயது போகியவ வனை போலவாள்
பெருகிய விடுமபை தீாததெம பேருல கடையச செய்தேம். ௬௪

இததனை யெலலாஞ செய்த திவன்பொருட் டிநத வேத
விததகன் றனைமை யொனறு மறிநதிலை வேடகை யெமபால
வைததுனக கிமமை யோடு மறுமையுந தேடித தநத
உததமன் றெருடைசந தாதிப புறப்பறறு மொழிநத நீரான். ௬௫

நிறையுடை யிவனை யிசசை வழியின னிறுததி யானற
மறைவழி நினறு நீதி மனனவாக களநத வாழ்நாள
குறைபடா தானச செலவ வாரியுட் குளிததது வாழ்கென்
றிறையவன் மொழிநத மாறற மிருசெவி நிரமபத* தென்னன். ௬௬

அச்சமுற் றுவகை யீாபப வதிசய வெள்ளத தாழ்ந்து
பொசசமி லனப ரெஙகுற றரெனப புகுநது தேடி
நச்சர வசைதத கூட னயகன் கோயி னண்ணி
இச்சையி† னிருககின் றூரைக் கண்டுபோ யிறைஞசி வீழ்நதான். ௬௭

(பா - ம்) * நிரப்ப. † கவிச்சையில்.

தொல்லைநீ ருலக மாண்டு சுடுதுயர் நரகத் தாழ
வல்லவென் னறிவுக் கேற்ற வண்ணமே செய்தே னீரென்
எல்லைதீர் தவப்பே றுய்வந் திகபர வேது வாகி
அல்லலெம் பிறவி நோய்க்கு மருமருந் தானீ ரையா. ௬௮

செறுத்துநா னும்மை யெண்ணா திழைத்தவித் தீங்கு தன்னைப்
பொறுத்துநீ ரும்போ னுங்கள் புவியெலாங் காவல் பூண்டு
மறுத்துடைத் தாளவ தாகென் றிரந்தனன் மண்ணி லாசை
வெறுத்தவா னகையுட் டோன்ற வேந்தனை நோக்கிச் சொல்வார். ௬௯

பாய்திரை புரளு முந்நீர்ப் படுகட லுலகுக் கெல்லாம்
ஆயிரஞ் செங்க ணானைபோ லரசுவீற் றிருப்பீ* ருங்கள்
நாயக னருளிச் செய்த வண்ணமே நயந்து செய்வீர்
தூயவ ரனோரே றுங்கள் சூழல்சேர்ந் தொழுக வல்லார் ௭௰

உம்மைநா னடுத்த நீரா லுலகியல் வேத நீதி
செம்மையா லிரண்டு நன்றுந் தெளிந்தது தெளிந்த நீரான்
மெய்ம்மையாஞ் சித்த சுத்தி விளைந்தது, விளைந்த நீராற்
பொய்ம்மைவா னவரி னீந்திப் போந்தது சிவன்பாற் பத்தி. ௭௧

வந்தவிப் பத்தி யாலே மாயையின் விருத்தி யான
பந்தமாம் பவஞ்ச வாழ்க்கை விளைவினுட் பட்ட துன்பம்
வெந்தது கருணை யாகி மெய்யுணா வின்பந் தன்னைத்
தந்தது பாதஞ் சூட்டித் தன்மய மாக்கிற் றன்றே ௭௨

சச்சிதா னந்த மாமத் தனிப்பர சிவனே தன்ன
திச்சையா லகில மெல்லாம் படைத்தளித் தீறு செய்யும்
விச்சைவா னவரைத் தந்த மேலவன் பிறவித் துன்பத்
தச்சமுற் றடைந்தோர்க் காணு வின்பவீ டளிக்கு மன்னோன். ௭௩

மந்தரங் கயிலை மேருப் பருப்பதம் வாரணாசி
இந்தநல் லிடங்க டோறு மிகபர போகம் யாக்குந்
தந்தருள் செய்தெம் போல்வார் தம்மனம் புறம்போ காமற்
சிந்தனை திருத்தி ஞானத் திருவுரு வாகி மன்னும். ௭௪

ஒப்பவா மிக்கோர் வேறற் றொருவனா யெங்குந் தங்கும்
அப்பரஞ் சுடரே யிந்த வாலவா யுறையுஞ் சோதி
கைப்படு கனிபோன் மேனாட் கண்ணுவ னாதி யோர்க்கு
மெய்ப்பொருள் விளக்கித் தோன்று வேதத்தை விருத்தி செய்தான். ௭௫

---

(பா - ம்)* அரச செய்திருப்பீர்.

தன்னரு ளான ஞானத் தபனிய மாகுந் தில்லைப்
பொன்னக ரிடத்தி லென்னைப் போகென்ப பணித்தா னீரும்
அன்னதற் கிசைதி ராகென் றுலவா யடிக்க டம்மைப்
பன்னருந் துதியா லேத்தி விடைகொடு பணிந்து போவார். எசு

தன்றொடக் கறுத்த நாதன் றொட்டொடக் குண்டு போவார்
பின்றொடர்ந் தரசன் செல்லப் பெருந்தவர் நின்மி னின்மின்
என்றவர் செலவுங் கூப்பி டெல்லைசென் றணிய னாகிச்
சென்றடி பணிந்து தென்னன் விடைகொடு திரும்பி னானே. எஎ

துறந்தவர் போக மீண்டு தொன்னக ரடைந்து தென்னன்
அறந்தரு பங்கி னாரை யடைந்துதான் பிரம்பு நீட்டப்
புறந்தரு கருணை வெள்ளம் பூரிப்பத் தாழ்ந்து நெஞ்ச
நிறைந்து வாய்கொள் ளாம னின்றெதிர் துதிப்ப தானான். எஅ

[கொச்சகக் கலிப்பா]

அடையாளம் படவொருவ னடித்தகொடுஞ் சிலைத்தழும்புந்
தொடையாக வொருதொண்டன் றொடுத்தெறிந்த கல்லும்போற்
கடையானேன் வெகுண்டடித்த கைப்பிரம்பு முலகமெல்லாம்
உடையானே பொறுத்ததோ வுன்னருமைத் திருமேனி. எகூ

கடியேறு மலர்மகன்மான் முதலாய கடவுளரும்
படியேழு மளவிறந்த பலவுயிரு நீயேயோ
முடியேற மண்சுமந்தாய் முதுகிலடி வடுப்பட்ட
தடியேனும் பட்டேனின் றிருமேனி யானேனோ அய

கைக்குமருந் தின்சுவையின் காட்டுமா றெனவினைக்கும்
பொய்க்குமருங் கலங்கி மண்ணுண்டு புலைநரகந்
துய்க்குமருந் துயர்களைவான் மாறாய்நின் றுணையடிக்கே
உய்க்குமருந் தவரிவரென் றறியாமை யொறுத்தேனே. அக

பாதியுமை யுருவான பரமேட்டி யெனக்கிம்மை
ஊதியமும் பரகதியு முறுதிபெற விளைவிக்கும்
நீதியினை மந்திரியாய் நின்னருளே யவதரித்த
வேதியரை யறியாதே வெறுத்துநா னொறுத்தேனே. அஉ

மாயா விருத்தியினான் மாழ்ந்து மாதவரை
ஆயா தொறுத்தே னருநரகத் தாழ்ந்துநான்
வீயாம லின்றனையார் மெய்ம்மையெலாந் தேற்றியவென்
தாயானாய் தண்ணளிக்கென் றமியேன்செய் கைம்மாறே. அங

மின்னையுணர்ந் தவர்வேத நெறிவேள்வி செய்தூட்டும்
இன்னமுதிற் கழிசுவைத்தோ விவனிடும்பிட் டெவவுயிர்க்கும்
மன்னவனே செந்துவர்வாய் மலர்நதமுது செய்தனையால்
அன்னையிலா வுனக்கிவளோ ரன்னையாய் வந்தாளோ. ௮௪

அன்றுசிறுத தொண்டரிடும் பிள்ளைக் கறியமுதும
மென்று சுவைதெரிநத வேடனிட்ட வூனுமபோல்
நன்றுநரை யாட்டியிடு பிட்டு நயநதருநதி
என்று மடியார்க் கெளிவநதா யெநதாயே. ௮௫

நரியாவும் பரியாககி நடத்தியுமம பரமன்றித
தரியாயான் றருதுகிலைத திருமுடிமேற் றரிததுமறைக்
கரியாய்நீ யென்பாச மறுக்கவருந திருமேனி
தெரியாதே பரியாசை திளைததிறுமாந திருநதேனே. ௮௬

விண்சுமக்குமம புளளாய் விலஙகாய்ச சுழன்றுமனம
புணசுமககுளு சூழசசி வலியுடைய புத்தேளிர
மண்சுமககு மளளராய் வநதிலரே வநதககாற
பண்சுமககுளு சொலலிபங்கன பாதமுடி காணபாரே. ௮௭

[அறுசீரடியாசிரிய விருததம்]

என்றுபல முறையாலே துதிததடைநதோர்க
கன்பரிவ ரிவரைத தேறின்
நன்றுமிக பரபோகம் வீடுபெற
லெளிதெனறு நகைத்தார வேநதன்
அன்றுதிருப் பணிபூசை பிறவுநனி
வளமபெருககி யழகார வெளளி
மன்றுடையா னடிககனபு முயிர்க்கன்புஞ
சுரநதொழுகி வாழு நாளில ௮௮

முன்புபெருந் துறையார்க்கு மடியார்க்கு
மறந்தெரிநத முறையா லீட்டிந
தன்பொருள்போ யுடன்பலவாய்த் தழைத்துவரு
பயனேபோற் றலையு வாவின்
நன்பனிகான் மதிகண்ட வுவரியெனப்
பலசெல்வ நாளு மோங்க
இன்புறவான சகநாத னெனுமகப்பெற்
றின்பத்து ளின்பத் தாழ்ந்தான். ௮௯

அம்மகனை முடிசூட்டி யரசாக்கி
 வாதவூ ரமைச்சர் சாரபான
மெய்ம்மைநெறி விளங்கியிரு வினையொப்பி
 லரன்கருணை விளைந்த நோக்கான்
மும்மைமலத் தொடர்நீந்திச் சிவானந்தக்
 கடற்படிந்து முக்கண் மூர்த்தி
செம்மலர்த்தா ணிழலடைந்தா னிறலரிமர்த்
 தனனென்னுந் தென்பார் வேந்தன். ௩௧

[வேறு]

வழுதியால் விடுக்கப் பட்ட வாதவூர் முனிக டமைப்
பழுதிலாப் பாடல் கொள்வார் பதிபல பணிந்து போந்து
முழுதுணர் மறையோர் வேள்விப் புகையண்ட முடிகீண் டேழி
எழுவட வரைபோற் றோன்று மெழிற்றில்லை மூதூர் சேர்ந்தார். ()

[வேறு]

வீதிதொறும் வீழ்ந்துவீழ்ந் திறைஞ்சியா
 லயத்தெய்தி மெய்ம்மை யான
சோதியறி வானந்தச் சுடருருவா
 சிவகங்கை தோய்ந்து மேனி
பாதிபகிர்ந் தவள்காணப் பரானந்தத்
 தனிக்கூத்துப் பயிலா நிற்கும்
ஆதியரு ளாகியவம் பலங்கண்டு
 காந்தநே ரயம்போற் சார்ந்தார். ௩௨

அன்றுகுருந் தடியிலடி வைத்தாண்ட
 கோலமே யருளா னந்த
மன்றினிடத் தெதிர்தோற்றி வாவென்பா
 ரெனமூரன் மணிவாய் தோற்றி*
நின்றதனிப் பெருங்கூத்தா நிலைகண்டா
 ரஞ்சலித்தா நிலமேல் வீழ்ந்தார்
ஒன்றரிய புலன்கரண வழிநீந்தி
 மெய்யன்பி னுருவ மானார். ௩௩

வண்டுபோற் புண்டரிக மலரில்விளை
 சிவானந்த மதுவை வாரி
உண்டுவா சகம்பாடி யாடியழல்
 வெண்ணெயென வுருகுந் தொண்டர்

---

(பா - ம்.) *தோன்றி.

விண்டுழா வியகுடுமி மன்றுடையான்
றிருவாககான் மிகுநத நேயங
கொணடுபோயக குணதிசையி லருநதவா வாழ்
தபோவனததைக் குறுகி யஙகண் ௯௨

குறிகுணங்கள கடநத தனிக கூததனுரு
வெழுததைநதின கொடுவா ளோசசிப
பொறிகரணக காடெறிநது வீசிமனப
புலநதிருததிப புனிதஞ செயது
நிறைசிவமாம விதைவிதைததுப் பசுபோதங
களைந்தருணண னீகால பாய
அறிவுருவாய விளைநததனிப பரானநத
வமுதருநதா தருநதி னொரா ௯௩

மானிரையுங் குயவரியும வநதொருஙகு
நினறுரிஞச மயஙகு கானத
தானிரைகன் றெனவிரஙகி மோநதுநக்க
வானநத வருட்கண் ணீரைக்
கானிறைபுள ளினமபருகக கருணைநெடுங
கடலிருக்குங் காடசி போலப
பானிறவெண ணீற்றனப ரசைவின்றிச
சிவயோகம பயிலு நாளில. ௯௪

புததர்சில ரிலஙகையினும போநதுழூ
வாயிரமெய்ப போத வேத
விததகரோ டேழுநாள வரையறுததுச
சூளொட்டி விவாதஞ செய்வார
இததகைய நாளேழில யாமிவரை
வேறுமெனு மெண்ணம பூண்ட
சித்தமுடை யவராக வவாகனவி
லெழுநதருளித தேவ தேவர். ௯௫

வாதவூ ரனைவிடுதது வாதுசெய்வீ
ரெனவிழித்து மறையோ ரந்தப
போதவே தியரைவனம புகுநதழைததா
ரபபோது பொதுவி லாடும்
வேதநா யகனபணித்த வழினினறு
ரெதிர்மறுபப மீண்டு போந்து
காதரா குலமூழ்கி யிருநதாமுத
தழனியிாததுக கலியைக காய்வார். ௯௬

பின்னுமவர் கனவின்கண் மன்றுண்டம
பிரியாத பெருமான் வந்து
முன்னவனைப் பெருந்துறையிற் குருந்தடியி
லாட்கொண்ட முறையி னானும்
இன்னிசைவண் டமிழ்மணிபோற் பாடுங்கா
ரணத்தானு மியாமன் றிட்ட
மன்னியபேர் மாணிக்க வாசகனென்
றழைமின்கள் வருவ னென்றார். ௯௯

உறக்கமொழிந் தறவோர்சென் றவர்நாம
மொழிந்தழைப்ப வுணர்ந்து நாதன்
அறக்கருணை யிதுவோவென் றவரோடு
மெழுந்துநக ரடைந்து மண்ணூன்
றுறக்கமுநீத் தருவருத்தார் மன்றுடுந்
துணைக்கமலந் தொழுது மீண்டோர்
சிறக்கனக மண்டபத்திற் புகக்கிருந்தா
ரதிஞர்குழா நெருங்கிச் சூழ. ௧௦௦

[வேறு]

தத்துநீர்க் கலத்திற் போந்த சீவரப் போர்வை தாங்கும்
புத்தரை வேறு வைத்துப் புகன்மினு மிறைவு நூலும்
அத்தலை நின்றோ ரெய்துங் கதியுமென் றுயர்ந்த கேள்வி
மெய்த்தவ நெறிமா ணிக்க வாசகர் வினவி னாரே. ௧௦௧

கனவினு நீறு காணாக் கைதவர் காட்சி யானும்
மனவனு மானத் தானும் வாசகப் பெருமான் றம்மை
வினவிய மூன்று முத்தே சாதியின் விரித்தார் வேதம்
அனையவர் கேட்டம் மூன்று மனுவாதஞ் செய்துட் கொள்ளா. ௧௦௨

இன்றிவாக் கனுமா னாதி யெடுப்பதென் னென்று காட்சி
ஒன்றுகொண் டவர்க டாமே யுடம்படன் மறுத்தார் காட்சி
அன்றியே தின்மை யாலே யனுமான வளவை யாலும்
நின்றவன் றங்கோ ளாதி நிறுத்திய மூன்று மென்றார். ௧௦௩

பொன்றுதன் முத்தி யென்பார் பூசுரர் பிரானை நோக்கி
இன்றெமைக் காட்சி யொன்றால் வென்றன மென்றீ ராகில்
நன்று நங் கட்வு டன்னை யளவையா னட்டி யெம்மை
வென்றிடு மென்று ரைந்தும வென்றவா முறுவல் செய்யா. ௧௦௪

பிறவியந் தகர்க்கு வெய்யோன் பேரொளி காட்ட லாமோ
மறைகளா லளவை தன்னாற் றேவரான் மனத்தால் வாக்கால்
அறிவருஞ் சோதி யெங்கோ னவன்றிரு நீற்றுத் தொண்டின்
குறிவழி யன்றிக் காணுங் கொள்கையா னல்ல னென்றார். க0ரு

தேற்றமில் லாதா ருங்கள் சிவனுக்குந் திருநீற் றுக்குந்
தோற்றமெப் படித்திட் டாந்தஞ் சொல்லுமி னென்றார் தூயோர்
வேற்றுமை யறநா மின்னே விளக்குது மதனை நீங்கள்
தோற்றபி னுமக்குத் தண்டம் யாதுகொல் சொன்மி னென்றார். ( )

செக்குர லிடையிட் டெம்மைத் திரிப்பது தண்ட மென்னா
எக்கராம புத்தர் தாமே யிசைந்தன ரெரிவாய் நாகங்
கொக்கிற கணிந்தா ரன்ப ருலாந்தகோ மயத்தை வாங்கிச்
செக்கரந் தழலவாய்ப் பெய்து சிவந்திட வெதுப்பி னாங்கி. க0எ

இவ்வண்ண மிருக்கு மெங்க ளிறைவன்றன் வடிவு மந்தச்
செவ்வண்ண மேனி பூத்த திருவெண்ணீ றதுவு மென்னா
மெய்வ்வண்ண முணர்ந்த வேத வித்தக ரவைமுன் காட்ட
உய்வ்வண்ண மறியா மூட ருள்ளமு முயிருந் தோற்றார். க0அ

இங்கிவர் தோற்ற வண்ணங் கேட்டவ ரிறப்பத் தின்பந்
தங்குவீ டென்று தேற்றுஞ் சமயத்தி லாழ்ந்த வாதிக்
கொங்கிவா தாரான் மூங்கைக் குயிற்பெடை யென்னத் தானீன்ற
மங்கையைக் கொண்டு தில்லை மல்லன்மா நகரில் வந்தான். க0கூ

யாவரே யாக வின்றிங் கென்மகண் மூங்கை தீர்த்தோ
ராவரே வென்றோ ரென்று ஞற்றவு மானம் பூண்டு
சாவதே முத்தி யென்பார் மணிமுதன் மூன்று தங்கள்
தேவரே யென்றென் றுளகிச் செய்யவுந் தீரா தாக. ககo

அந்தணர் பெருமான் முன்போ யரசன்றன் மகளைப் போகட்
டிந்தநோய் நீரே தீர்க்க வேண்டுமென் றிரந்தா னையன்
சுந்தர நாதன் மன்று ளாடிய துணைத்தா ளுன்னிச்
சிந்தைசெய் தருட்க ணோக்கா றிருந்திழை யவளை நோக்கா. ( )

வேறுவே றிறைவன் கீர்த்தி வினாவுரை யாகப் பாடி
யீறிலா னன்பர் கேட்ப விறைமொழி கொடுத்து மூங்கை
மாறினாள் வளவன் கன்னி மடவரல் வள்ளவன் கண்டு
தேறினான் சிவனே யெல்லாத் தேவர்க்குந் தேவ னென்னா. ககஉ

---

(பா - ம்.) [illegible] இறைத்தனர்.

பின்பர வாரம் பூண்ட பிரானருள் விளையப் பாடும்
அன்பரை முனிவா மூவா யிரவரை யடியிற றாழ்ந்து
முன்பவா சொனன வாறே மூாககரைத தடிநது மன்றுள்
இன்பரை நடஙகண டேததி யிறைமகன் சைவ ஞானன். ககரு

மாசறு மணிபோற் பன்னுள் வாசக மாலை சாத்திப்
பூசனை செயது பனனட் புணணிய மனறு ளாடும
ஈசன தடிககீ ழெய்தி யீறிலா வறிவா னநதத
தேசொடு கலநது நினறா சிவனருள விளகக வநதார. ககசு

ஆகச செய்யுள் - ருக0௫.



## அறுபத்திரண்டாவது

# பாண்டியன் சுரந்தீர்த்த படலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

வான லமுத மதிமுடிமேன மதுரைப பெருமான மணசுமநது
தேன லமுத வாசகரைக கதியில விடுதத திறனிதுமேற
பானன் மணிவாயக கவுணியனை விடுததுச சமணா படிறறொழுகுங
கூனல வழுதி சுரந்தணிததாட கொணட கொளகைக கூறுவாம.க

வாகு வலததான சகநாத வழுதி வேநதன மகனவீர
வாகு வவன்சேய் விககிரம வாகு வவனசேய பராககிரம
வாகு வனையான மகனசுரபி மாற- னனையான றிருமைநதன
வாகு வலததான மறஙகடிநது மணணொ ளுஙகுங குமதெனனன ()

அன்னை குமரன் கருபபுரபாண டியனு மவனசேய் காருணிய
மன்னு மவனறன மகனபுருடோத தமனு மவனறன் மகனுகும
மினனா மௌலிச† சததுருசா தனபாண டியனும விறலவேநதன
இன்னை மகனகூன் பாணடியனு மிவனறோள் வலியா லிசைமிககான.()

திண்டோள் வலியாற குடநாடா செம்ம றனையு மாரலஙகல
வண்டோ லிடுதா ரிரவிகுல மருமான் றனையு மலைநதுபுறங
கணடோா குடைககீழ நிலமுனறுங காவல புரிநது கோலோசசிப
புணடோய் குருதி மறககனனிப புகழவேல வழுதி நிகழநாளில.()

விண்டு பூரவுங கைமமாவும வெறுககைக குவையு மணிககுவையும
வண்டு வீழுந தாரளக வல்லி யாய மொடுநலகிக்
கண்டு கூடற கோமகனைக காலில வீழ்நது தனனொடு
பணடு போலகக கைககொணடு போனனை றெனனா பனநதாரான.ரு

சென்னிக் கோனுந் தானீன்ற திலகப பிடியை யுலகமெலாம
மின்னிக் கோதில் புகழொளியால விளக்குஞ் சைவ மணிவிளககைக
கன்னிக் கோல மஙகையருக் கரசி தனைக் கௌரியறகு
வன்னிக் கோமுன் மணமபுணர்த்தி வாங்கினான்றன வளநாடு.சு

---

(பா - ம்.) *சுரதுமாரன்· ‡ மின்னூர் மோலி.

[வேறு]

வளவர்கோன் செழியன் கற்பின் மங்கையர்க் கரசி யாருக்
களவறு நிதியுஞ் செம்பொற் கலன்களு மணியும் போகம்
விளைநில மனைய வாய வெள்ளமும் பிறவுந் தென்னன்
உளமகிழ் சிறப்ப வேந்தர் வரிசையா லுதவிப் பின்னர். ௭

கோதறு குணத்தின் மிக்க குலச்சிறை யென்பா னங்கோர்
மேதகு கேள்வி யானை விடுத்தனன் மீண்டு தென்னன்
காதலி யோடு காவற் கடவுள்*செம் பதுமக் கோயின்
மாதரை மணந்து செல்வானை போல்வந்து மதுரை சேர்ந்தான். ௮

மலர்மகள் மார்பன் பொன்னின் மன்னவன் பயந்த தெய்வக்
குலமக ளுடனே வந்த குலச்சிறை குணனுங் கேள்வித்
தலைமையு மதியின் மிக்க தன்மையுந் தூக்கி நோக்கி
நலமலி யமைச்ச னாக்கி நானிலம் புரக்கு நாளில். ௯

வல்வினை வலியான் மெய்யில் வலியகூ னடைந்தான் போலக்
கொலவினை யிலராய் வஞ்சங் கொண்டுழன் றுடுத்த பாசம்
வெல்வினை யறியா நக்க வேடர்சொல் வலையிற் பட்டு
நலவினை யுதவாத் தென்ன னன்மறை யொழுக்க நீத்தான். ௰

போதவிழ் தாரா னக்கா புன்னெறி யொழுக்கம் பூண்டோ
னேதமிற் கன்னி நாடு மமணிருண் மூழ்கிப் பூதி
சாதன நெறியா ளசைவ சமயமு முதறிச் செல்வ
மாதவ நெறியுங் குன்ற மறைந்தது வேத நீதி. ௧௧

பறிபடு தலையு மாயி னுடுக்கையும் பாசிப் பல்லும்
உறிபொதி கலனு மத்தி நாதரென் றுரைக்கு நாவும்
அறிவழி யுளமபோ னணற நழிந்தவெற் றரையுங் கொண்டு
குறிகெடு மணங்கு சூழ்ந்தாங் கமணிறை கொண்ட தெங்கும். ௧௨

அருந்தமிழ்ப் பாண்டி வேந்தற் குறுதியா யாக்கஞ் செய்யும்
மருந்தினிற் சிறந்த கற்பின் மங்கையர்க் கரசி யாரும்
பெருந்தகை யமைச்சு நீரிற் குழைத்தன்றிப் பிறங்கப் பேறு
தருந்திரு நீறி டாராய்ச் சிவனடிச் சார்பி னின்றார். ௧௩

பொய்யுரை பிதற்று மிந்தப் புன்சமண் களைகட் டண்டு
மெய்யுரை வேத நீதி வியன்பயிர் தலைச்செய் தோங்கச்
செய்யுந ரெவரோ வென்று†சிந்தையிற் கவலை பூண்டு
வையுந ராகிக் கூட லாதனை வணங்கப் போனார். ௧௪

(பா - ம்.) *மாயக்கடவுள். †எவரோ வென்று.

பேதுற்ற முனிவர்க் கன்று பெருமறை விளக்கஞ் செய்த
வேதத்தின் பொருளே யிந்த வெஞ்சமண் வலையிற் பட்டுப்
போதத்தை யிழந்த வேந்தன் புந்தியை மீட்டிப் போதன
பாதத்தி லடிமை கொள்வா யென்றடி பணியு மெல்லை. ௧௫

வேதிய னொருவன் கண்டி வேடமும் பூண்டோன் மெய்யிற்
பூதியன் புண்டரீக புரத்தினும் போந்தோன் கூடல்
ஆதியைப் பணிவான் வந்தான் மங்கையர்க் கரசி யாரும்
நீதிய வமைச்ச ரேறு நோபட வவனை நோக்கா. ௧௬

எங்கிருந் தந்த ணனீர் வந்தனி ரென்றா ராய்ந்த
புங்கவன் சென்னி பொன்னி நாட்டினும் போந்தே னென்றான்
அங்கவ ரங்குண் டான புதுமையா தறைதி ரென்றார்
சங்கரற் கன்பு பூண்டோ னுண்டென்று சாற்று கின்றான். ௧௭

ஏழிசை மறைவல் லாளர் சிவபாத விதய ரென்னக்
காழியி லொருவ ருள்ளார் காரமண் கங்குல் சீப்ப
ஆழியி லிரவி யென்ன வொருமக வளித்தி யென்னா
ஊழியி லொருவன் றன்னை யுள்கிநோற் றொழுகி நின்றார். ௧௮

ஆயமா தவர்பா லீச னருளினு லுலகை முய்யச்
சேயிளங் கதிர்போல் வந்தான் செல்வனுக் கிரண்டாண் டெல்லை
போயபின் மூன்று மாண்டிற்* பொருகடன் மிதந்த தோணி
நாயகன் பிராட்டி யோடும் விடையின்மே னடந்து நங்கை. ௧௯

திருமுலைப் பாலி னோடு ஞானமுந் திரட்டிச் செம்பொற்
குருமணி வள்ளத் தேந்திக் கொடுப்பவப் பாலன் வாங்கிப்
பருகியெண் ணிறந்த வேதா கமமிவை பற்றிச் சார்வாய
விரிகலை பிறவு மோதா துணர்ந்தனன் விளைந்த ஞானம். ௨௦

நம்பந்த மறுப்போன் ஞான நாயகன் ஞானத் தோடு
சம்பந்தஞ் செய்து ஞான சம்பந்த னாகி† நாவில்
வம்பந்த முலைமெய்ஞ் ஞான வாணியுங் காணி கொள்ள
அம்பந்த மறைக ளெல்லா மருந்தமி ழாகக் கூறும். ௨௧

கரும்பினிற் கோது நீத்துச் சாறடு கட்டி யேபோல்
வரம்பிலா மறையின் மாண்ட பொருளெலா மாணத் தெள்ளிச்
சுரும்பிவர் கொன்றை வேணிப் பிரானிடந் தோறும் போகி
விரும்பிய தென்சொன் மாலை சிவமண விளையச் சாத்தி. ௨௨

(பா - ம்.) *போயின மூன்றுமாண்டில்.
†செய்து ஞானசம்பந்தனாக.

பருமுத்த முலையாள பங்க னருளினாற் பசும்பொற் றாளந்
திருமுத்தின் சிவிகை காள நெண்முத்தின் பந்த ரின்ன
விருமிதத வகைபோற் பெற்றுப் பாலையை நெய்த லாக்கிப்
பொருமுத்த நதிசூழ் வீழிப் பொற்படிக் காசு பெற்று. உ௩

அருமறை வணங்குங் கோயிற் கதவினை யடைக்கப் பாடிப்
பானுறை பதிக ளெங்குந் தொழுதனா பாடிப பாடி
வருமவா றுநக ளாட்டு வணஙகவும வருவ ரென்னத
தருமறா லணிநத தெய்வத தாபதன் சாற்ற லோடும. உ௪

கற்பலா கொடியன் றருந தெனனவன் கண்போல வாரும
அறபுரை யமணபே யோட்டி யன்றுதங் கோமான் மெய்யிற்
பொறபுறு நீறு கண்டு பூதிசா தனததா லெய்துஞ
சிறபர வீடு கண்ட மகிழுச்சியுட் டினைததோ ரானா. உ௫

தஙகளபோ தீட்டி யோலை விண்ணப்பஞ சண்பை நாடர்
புங்கவாக குணர்தத வநதப பூசுரன் கையிற் போக்கி
மஙகையாக் கரசி யாரு மரசறகு மருநதன் றானும்
அங்கயற் கண்ணி கோனைப பணிநதுதம மகததிற புக்கார. உ௬

பண்படு வேதச செலவன் வலலைபோய்ப் பழன வேலிச்
சண்பையா பிரானைக கணடு பறியுண்டு தலைக ளெல்லாம
புணபடத திரியுங கையா பொய்யிருள் கடநதா தநத
வண்படு மோலை காட்டிப பாசுர மெடுததுச சொன்னான். உ௭

[எழுசீரடியாசிரிய விருத்தம்]

வெஙகுரு வேநத ரடிபணிந தடியேன்
　　குலசசிறை விளமபுவிண ணபபம
இஙகெழுந தருளிச சமணிரு ளொாதுககி
　　யெமமிறை மகறகுநீ றளிததுப
பொஙகிரும பணைசூழ தெனறமிழ் நாட்டைப்
　　பூதிசா தனவழி நிறுததி
எஙகளைக காகக வென்றபா சுரங்கேட்
　　டெழுநதனா கவுணியாக் கிறைவா. உ௮

ஆதகா திதுவென் றேதுவார் நாவுக்
　　கரையர்நீர் சிறியவ ரவரோ
பாதக மஞசாா தமமொடும் பன்னாட்
　　பழகிய வெனையவர் செய்த

வேதனை யுவந்து கூறுவ தென்னை
    விடுகதில் லமமவோ வுமககிப
போதுநாள் கோள்கள வலியில வெனனப
    புகலியா வேநதரும் புகலவாா. ௨௯

எநதையெம பெருமா னருளிலா போல
    வினனண மிசைப்பதென் னவாசெய்
வெநத வேதனையி னுய்நதனீா நாளகோள
    விலங்குபுள ளவுணாபேய் பூதம
அந்தமில் பலவு மமமையோ டபப
    ஞனையா னடபபன வவாநஞு
சிந்தையே கோயில் கொண்டுவீற றிருப்பத்
    தீஙகிழை யாவென வெழுநதாா

[அறுசீரடியாசிரிய விருத்தம்.]

மாமுர சொலிபபச சஙகங காகளம வாயவிட டேஙகச
சாமரை பனிபப முததின பநதரிற றரளத தெய்வக
காமரு சிவிகை மேறகொண* டமணிருள கழுவுஞ சோதி
யாமென நெறிக்கொண் டீச னிடநதொறு மடைநது பாடி ௩௧

செம்பிய ஞடு நீநதித† தென்னவ ஞடு நண்ணி
வெமபிய சுரமு முலலைப புறவமு மேக விலலைத
துமபிகை நீடடி வாஙகு மலைகளுந துறநது பாகத
தமபிகை யுடையான கூட னகாபபுற னணுகச செலவாா. ௩௨

புண்ணிய நீற்றுத் தொணடா குழாததினுட் புகலி வேநதா
நணணிய சிவிகை மீது நகைவிடு தரளப பநதா
கணணிய றோற்றந‡ தீமபாற கடலவயிற றுதிததுத தீாநது
விணணியன முழுவெண டிஙகள விளககமே யொதத தன்றே. ()

தேமபடு குமுதச செவவாய்ச சிரபுரச் செல்வா முனனம்
போமபரி சனததாா தமமிற் பொனனெடுஞ சின்ன மாாப்போா
தாமபர சமய சிஙகஞ சமணிருள கிழியப பானு
வாமபடி வநதா னென்றென ருாதநெழு மோசை கேளா. ௩௪

கின்றுணடு திரியுங கையர் ரெதிாவநது நீவிா நுஙகள
கொனறறஞ சொனன தேவைக குமபிட வநதா விநத
வென்றிகொள சினன மெனகொல வீறென்கொல யாரை வென்றீர்
என்றனர் தடுததா ரெனறு மீறிலா னடியாா தம்மை ௩௫

---

(பா - ம.) * மேல்கொண்டு. † செமபியனுடு நீஙகி.
‡ கண்ணிய தோற்றம

மாமத மொழுகச் செல்லுந் திண்டிறன் மத்த வேழந்
தாமரை நூலிற் கட்டத் தடைபட வற்றே கொற்றக்
காமனை முனிந்தார் மைந்தர் கயவர்தந் தடையை நீத்துக்
கோவணி மாட மூதூ ரடைந்தரன் கோயில் புக்கார். ௩௬

கைம்மலைச் சாபந் தீர்த்த கருணையங் கடலைத் தாழ்ந்து
மும்முறை வலந்து ஞான முகிழ்முலைப் பாலி னோடு
செம்மணி வள்ளத் தீந்த திருவொடுந் தொழுதா னந்த
மெய்ம்மய வெள்ளத் தாழ்ந்து நின்றனர் வேதச் செல்வர். ௩௭

மறைவழி நின்று நின்னை வந்திசெய் துய்ய மாட்டா
நிறைவழி வஞ்ச நெஞ்சச் சமணரை நெறிக ளெல்லாஞ்
சிறைபட வாது செய்யத் திருவுள்ளஞ் செய்தி கூற்றைக்
குறைபட வுதைத்தோ யென்று குறித்துரை பதிகம் பாடி. ௩௮

வேண்டுகொண் டருளைப் பெற்று மீளுமப் போது கண்டு
மூண்டவைம் பொறியும் வென்ற வாகீச முனிக ளன்ன*
ஆண்டுளா ரொருவர் வேண்ட வவர்திரு மடத்தி லன்பு
பூண்டெழு காத லோடும் போயினார் புகலி வேந்தர். ௩௯

அங்கெழுந் தருளி யெல்லி னமுதுசெய் திருப்ப வற்றைக்
கங்குல்வா யமணர் செய்யுங் கருத்தருஞ் செயலுந் தங்கள்
மங்கல மரபின் வந்தாள் வருத்தமுங் காண வஞ்சிச்
செங்கதி ரவன்போய் மேலைச் செழுங்கடல் வெள்ளத் தாழ்ந்தான். ௪௰

மாறுகொ ளமணர் செய்யும் வஞ்சனைக் கிடனே யொத்து
வேறற நட்புச் செய்வான் வந்தென விரிந்த கங்குல்
ஈறற முளைத்த வானமீ னினம்வாய் பறித்த செந்நீ
ஊறுபட் டெழுந்த மொக்கு ளொத்தவக் கங்குலெல்லை. ௪௧

[கலிநிலைத்துறை.]

வைதி கத்தனி யிளஞ்சிறு மடங்கலே றடைந்த
செய்தி யைத்தெரிந் தயன்மலை யிடங்களிற் றிரண்ட
கைத வத்தவெண் ணாயிரங் கயவரு மொருங்கே
எய்தி முத்தமிழ் விரகர்மேற் பழித்தழ லிழைத்தார். ௪௨

மெய்யில் சிந்தையா ரத்தழற் கடவுளை விளித்தாங்
கெய்தி யெம்பகை யாயினோ ரிருக்கையை யழுது
செய்து வாவெனப் பணித்தனர்† சிறுவிதி மகத்துக்
கையில் பூந்தவன் செல்லுமோ வஞ்சினன் கலங்கி. ௪௩

---

(பா - ம்.) * முனிவரென்ன. † வாவென விடுத்தனர்.

ஈனா தாஞசடத தீயினை யெடுததன ரேகி
ஞானபோனகா மடததினிற செருகினா நநதா
தான தீபபுகை யெழுவதை யடியவா கணடு
வான நாயகன மைநதருக குணாததினர் வலலே சச

கிடடா நோககியத தீயினை கூடல தெனறமிழக
அடட மூாததியை யஙகிருந் தருமறைப பதிகந
துடடா பொயயுரை மேறகொணடு தொனமுறை துறநது
விடட வேநதனைப பறறெனப பாடினா விடுததா சரு

அடுதத தககணத தரசனை வெபபுநோ யாகித
தொடுதத திடடபல கலனகளுந துகளெழப பனிநீா
மடுதத சாநதமுங கலவையு மாலையுங கருகப
படுதத பாயலுஞ சருகெழப புரவலன பதைததான சசா

வளவா கோனறிரு மடநதையு மநதிர ரேறுந
தளாவ டைநதுநன மருததுநூல விஞசையா தமைககூஉய்ப
பளகில பனமருந தருததவும பாாவையி ஞலும
விளைவதே யனறி வெஞசுரந தணிவது காணா சஎ

சவலை நோனபுழந் திமமையு மறுமையுஞ சாரா
அவல மாசரை விடுததன ரனைவரும பாாதது
தவவ லததினு மருநதினுந தணிநதில தாகக
கவலை யெயதினா ரிருநதனா விடிநதது கஙகுல சஅ

வடட வாழியொன றுடையதோப பரிதிதன மருமான
பெடட காதலகூா மருகனைப பறறிய பிணிகேட
டிடட காரிரு ளெழினியை யெடுதெடுத தஙகை
தொட்டு நோககுவான வநதெனத தொடுகடன முளைததான. (),

வாலி தாகிய சைவவான பயிாினை வளாபபான
வேலி யாகியோ ரிருவரும வேநதனை நோககிக
கால பாசமுஞ சுடுாிநநோ யருமறைக காழிப
பால ராலன்றித் தீாததிடப படாதெனப பகாநதா ருo

பொயயா சாாபினை விடாதவ னிஙகுநீா புகன்ற
சைவா நீறிட்டுப் பாாப்பது தகுவதோ வெனன
ஐய நீயெனைத திறததினு லாயினு நோய்தீாந
துய்ய வேண்டுமே யிதனில்யா துறுதியென றுரைததா. ருக

அழைமி னீணடென வரசனு மிசைநதன ஞர்வந
தழையு மந்திரத தலைமகன றனிநக ரெஙகும
விழவு தூங்கநன் மங்கல வினைகளால விளக்கி
மழலை யினறமிழ்விரகாதம மடததில்வந தெயதா. ௫௨

அனறு கேள்வியா லருநதிய ஞானவா ரமுதை
இனறு கணகளா லுணடுகண பெறறபே றெயதிச
சென்றி றைஞசினு னெழுநதிருந தீயமண சூழ்சசி
வென்ற சிநதையீ ரென்றனா பூநதராய வேநதா. ௫௩

நனறிருநதனி ரேயென நனகமலாத தடநதாா
வெனறி மீனவன கறபினுா தமமையும வினவ
என்று நமமரு ளுடையவாக கெவனகுறை யெனனு
ஒனறு கேணமைகூ ரனபினு ரிதனையு முரைபபாா ௫௪

கையா மாளவு நீறறிலுற சவுரியன றேயம
உய்வ தாகவு மின்றுநம மருளினு லொலிநீா
வையை நாடனமேல வெபபுநோய வநததா லதனை
ஐய தீாததிடல வேணடுமென றடியிலவீழந திரநதாா. ௫௫

இரநத வன்பருக கனனதா கெனறருள சுரநது
பரநத நிததில யானமேற பனிககதிா மருமான
சுரநத ணிபபலென றேகுவா ஞெததுமெய்ச சுருதி
புரநத ளிபபவா பாணடியன கோயிலிற புகுவாா. ௫௬

வாயி லெஙகணுந தூபமு மஙகல விளககுந
தோய குமபமுங் கொடிக்ளுஞ சுணணமுந துவன்றச்
சேய காகள வொலிமனனன செவிபபுலன சுவைபபக
கோயி லெயதினு ரமணாதஙு கோளரி யனையாா ௫௭

காவ லோனமருங கிட்டதோா கதிாமணித தவிசின்
மேவி னுரவா நோககினன மீனவன றெளிநது
வாவி தாழ்செழுந தாமரை யெனமுக மலாநது
பாவி யேனபிணி தணிதநெதனை பணிகொணமி னென்றுன. ௫௮

புலைதநெொா றிறகுவித தாயினோா கேடடினம புழுஙகிக
கலைதத டஙகட னீநதிய காவலோ யுனறன
வலபபு றததுநோ யிவரையு மறறைநோ யெமையுந
தொலைததி டபபணி யெனறனாா கைதவன சொல்வான். ௫௯

---

(பா - ம்.) * துவனறி.

அனைய செய்திதென் றிசையுமுன் சமணரு* மசோகனை
றனைநி னைநதுகைப பிலியாற தடவியுங் கரத்துக்
கனைகொ ளாலிநீா சிதறியு நெயசொரி கனல்போற்
தினவி மேலிடக கணடனா தீாநதிடக காணா. ௬௰

தீயா மானமிக் குடையராய்ச செருக்கழிந் திருப்பப்
பாய கேளவியோா புணணியப பையுணீ றளளிக
காயு நோயது தணிததிடக கருதிஞ ரதனை
மாய நீறென விலககினா மாயை செயதழிவாா. ௬௧

அண்ட நாயகன் றிருமடைப பளளிநீ றளளிக
கொணடு வாருமென் றருமறைக கவுணியா கூறக்
கணடு காவல ரேவலா கைககொடு வநதாா
வண்டு லாவுதாா வழுதிநோய தணிபபவா வாஙகி. ௬௨

மருநது மநதிரம யாவையு மறையுரைப பதுவும
பொருந்து மினபவீ டளிபபதும போகமும பொருளுந்
திருநது மாலவா யானறிரு நீறெனச சிறபபித
தருநது மின்னமு தனையசொற பதிகம தறைநது. ௬௩

மெயயி லிடடனா வருடலும வெஞசுரந துறநத
மையில சிநதையோா வெகுளியிற றணிநதது வாசஞ
செயத தணபனி நீாவிரைச சநதனந திமிரநதால
லெய்து தணமைய தாயின திறைவலப பாகம். ௬௪

பொழிந்த தணமதுத தாரபுனை பூழியா கோனுக
கிழிநத செயகையா கைதொட வெரியிடு சுரததாற்
கழிநத துனபமுங கவுணியா கைதொடச சுரநதீாந
தொழிநத வின்பமு மிருவினை யொததபோ லொதத. ௬௫

ஐய விசசுர மாறறரி தாறறரி தென்று
வையை நாடவன வலமண் மாசுதீாந தடியேன
உய்ய வேண்டுமே லதனையு மடிகளே யொழிததல
செய்ய வேண்டுமென றிரநதனன் சிரபுரக் கோனை. ௬௬

பிளளை யாரிடப பாகமும பண்டுபோற பெருமான்
வெள்ளை நீறுதொட டஙகையா னீவுமுன மேனாள
உளள கூனுடு வெப்புநோ யொழிநதுமீ னுயாதத
வளளன மாசறக கடைநதவிண மணியெனப பொலிநதான். ௬௭

---

(பா - ம்.) * இசைததலுமமணரும்.

அன்னதொரு காரணததாற சவுநதரிய
பாண்டியனென் ருகியென்
தென்னவாகோன் கவுணியர்கோன் றிருநோக்காற்
பரிசததாற் றெருடும் வாககாற
பொனனடிதாழ்ந தைநதெழுதது மூபதேசப
பேறடைந்த பொலிவால் வஞ்சந்
துனனமணர் நெறியிகழநது தொலவேத
நெறியடைநது தூய ஞனன். ௯௮



## அறுபத்துமூன்றாவது

# சமணரைக் கழுவேற்றிய படலம்

[அறுசீரடியாசிரிய விருததம]

பஞசவ னடைநத நோயைப பாலறா வாயர தீரதது
நஞசணி கணட னீறு நலகிய வணணஞ சொனனேம
அஞசல ராகிப பினனும வாதுசெய தடஙகத தோறற
வஞசரைக கழுவே றிடட வண்ணமுஞ சிறிது சொலவாம. க

தெனனவன றேவி யாரு மமைசசருட சிறநத சிஙகட்
அனனவன றனனுங காழி யநதண ரடியில வீழநதெம
மனனவன வெபபுங கூனும பாசமு மாறறி னீரே
இனனமு மடியேம வேணடுங குறைசெயத தககதென்றார. உ

கன்னிநா டெஙகு மிநதக காரமண் காடு மூடித
துனனின திதனை யினனே துணிததிடல வேணடு மென்றார
அனனவ ரால வாயார திருவுளள மறிவே னென்று
உன்னிய மனதத ராகி யொயயெனக கோயில புககார ங

அவவிரு வோருங* கூட வடைநதுபொற கமலம பூதத
திவவிய தீரததந தோயநது சேணெடுங கணணி பாக
நவவியங கமலச செஙகை நாதனைத தாழ்நது வேநதன
வெவவிய வெபபு நீததார தொழுதிது வினவு கின்றார ச

காயமே யொறுத்து நாளுங் கைதவம பெருக நோறகும
பேயரை யிமமை யோடு மறுமையும பேறற றுரை
நீயுரை செய்த வேத வேளவியை நிநதை செயயுந
தீயரை யொறுததல செய்யத திருவுளஞ செயதி யென்றார் ரு

வெமமத வேழங காயநத விடையவா விசும்பிற் சொலவார
எமமனோ ராவீர நுஙகட் கிசைநததே யெமக்கும வேணடுஞ
சமமத மதனால வெலலத தககவ ராக நீரே
அம்மத முடையார தோறகத தககவ ராக வென்றே சா

(பா - ம்.) * அவவிரு பேரும.

